


# விநாயகரகவல்
# விநாயக கவசம்



சார்வரி, தை, 23 (5-2-61)
ஞாயிறு நடைபெற்ற
கும்பாபிஷேக வெளியீடு.
தாதுபோனமூலை.

உ
சிவமயம்.

# ஸ்ரீ சித்திவிநாயகர்
## மகா கும்பாபிஷேக
## வெளியீடு.



பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

(திருஞானசம்பந்தர்)

**சித்திவிநாயகர் துதி.**

திங்கள்சேர் சடையான் மைந்தன்
சித்திவி நாய கன்தாள்
பொங்குமன் போடு போற்றி
பொன்னுமெய்ப் பொருளபோ கங்கள்
தங்கிடக் கல்வி நல்ல
தகைமைசால் அறிவொ ழுக்கம்
இங்கிவை யனைத்தும பெற்று
இன்பொடு மன்னி வாழ்வாம்.

# விநாயகரகவல்

ஒளவையார்
அருளிச்செய்தது.

உ
கணபதி துணை

# விநாயகர் அகவல்.

## வரலாறு.

சுந்தரமூர்த்தி நாயனருடனே கைலாயத்துக்குப் பரமசிவனு டைய சன்னிதானத்தில் ஆதியுலா அரங்கேற்ற எழுந்தருளுகின்ற சேரமான் பெருமாளுயனர் 'ஔவையாரை அழையாமல் வந்துவிட்டோமே' என்று நினைத்தார். அது விநாயகரைப்பூசித்துக் கொண்டிருந்த ஔவையாருக்குத் தெரிந்து தானும் அவர்களுடனே கூட கைலாயத்துக் போகவேண்டுமென்கிற விருப்பங் கொண்டு துரிதமாகப் பூசை செய்தாள். விநாயகர், "ஔவையே! நீ சாவதானமாகப் பூசைசெய்; நீ அவர்

களுக்கு முன்னதாகவே போய்ச் சேரும்படிசெய்கிறேன்''என்ருர். அப்படியே அவள் துரிதமில்லா மற் பூசைசெய்து இந்த அகவலைத் தோத்திரமாகப் பாடிஞள். அப் போது விநாயகர் தாம் சொன்ன படி ஒளவையாரைக் கைலாயத் திற் சேர்த்தார்.

பின்பு வந்த சேரமான் பெரு மாளுயனுரைப் பார்த்து ஒளவை யார் சொன்ன கட்டளைக் கலித் துறை:-

மதுரமொழி நல்லுமையாள்
புதல்வன் மலர்ப்பதத்தை
முதிரநினையவல் லார்க்கரிதோ
முகின்போன் முழங்கி
யதிரநடந்திடும் யானையுந்தேரு
மதன்பின் வருங்
குதிரையுங்காதங் கிழவியுங்காதங்
குல மன்னனே.

உ

கணபதி துணை.

# விநாயகரகவல்.

சீதக்களபச்
  செந்தாமரைப்பூம்
பாதச்சிலம்பு
  பலவிசைபாடப்
பொன்னரைஞாணும்
  பூந்துகிலாடையும்
வன்னமருங்கில்
  வளர்ந்தழகெறிப்பப்
பேழைவயிறும்
  பெரும்பாரக்கோடும்
வேழமுகமும்
  விளங்குசிந்தூரமும்
அஞ்சுகரமும்
  அங்குசபாசமும்

நெஞ்சிற்குடிகொண்ட
நீலமேனியும்
நான்றவாயும்
நாலிருபுயமும்
மூன்றுகண்ணும்
மும்மதச்சுவடும்
இரண்டு செவியும்
இலங்குபொன்முடியுந்
திரண்டமுப்புரிநூல்
திகழொளிமார்பும்
சொற்பதங்கடந்த
துரியமெஞ்ஞான
அற்புதநின்ற
கற்பகக்களிறே
முப்பழநுகரும்
மூஷிகவாஹன

இப்பொழுதென்னை
யாட்கொளவேண்டித்
தாயாயெனக்குத்
தானெழுந்தருளி
மாயாப்பிறவி
மயக்கமறுத்துத்
திருந்தியமுதலைந்
தெழுத்துந்தெளிவாய்ப்
பொருந்தவேவந்தென்
னுளந்தனிற்புகுந்து
குருவடிவாகிக்
குவலயந்தன்னில்
திருவடிவைத்து
திறமிதுபொருளென
வாடாவகைதான்
மகிழ்ந்தெனக்கருளிக்

கோடாயுதத்தாற்
கொடுவினைகளைந்தே
உவட்டாவுபதேசம்
புகட்டியென்செவியில்
தெவிட்டாதஞானத்
தெளிவையுங்காட்டி
ஐம்புலன்றன்னை
யடக்குமுபாயம்
இன்புறுகருணையின்
இனிதெனக்கருளி
கருவிகளொடுங்குங்
கருத்தினையறிவித்
திருவினைதன்னை
அறுத்திருள்கடிந்து
தலமொருநான்குந்
தந்தெனக்கருளி

மலமொருமூன்றின்
மயக்கமறுத்தே
ஒன்பதுவாயில்
ஒரு மந்திரத்தால்
ஐம்புலக்கதவை
அடைப்பதுங்காட்டி
ஆருதாரத்
தங்குசநிலேயும்
பேருநிறுத்திப்
பேச்சுரையறுத்தே
இடைபிங்கலேயின்
எழுத்தறிவித்து
கடையிற்சுழிமுனேக்
கபாலமுங்காட்டி
மூன்றுமண்டலத்தின்
முட்டியதூணின்

நான்றெழுபாம்பி
ஞவிலுணர்த்திக்
குண்டலியதனிற்
கூடியவசபை
விண்டெழுமந்திரம்
வெளிப்படவுரைத்து
மூலாதாரத்தின்
மூண்டெழுகனலைக்
காலாலெழுப்புங்
கருத்தறிவித்தே
அமுதநிலையும்
ஆதித்தனியக்கமுங்
குமுதசகாயன்
குணத்தையுங்கூறி
இடைச்சக்கரத்தின்
ஈரெட்டுநிலையும்

உடற்சக்கரத்தின்
உறுப்பையுங்காட்டிச்
சண்முகதூலமுஞ்
சதுர்முகசூக்ஷமும்
எண்முகமாக
இனிதெனக்கருளிப்
புரியட்டகாயம்
புலப்படவெனக்குத்
தெரியெட்டுநிலையுந்
தெரிசனப்படுத்திக்
கருத்தினிற்கபால
வாயில்காட்டி
இருத்திமுத்தி
இனிதெனக்கருளி
என்னையறிவித்
தெனக்கருள்செய்து

முன்னைவினையின்
முதலைக்களைந்து
வாக்குமனமு
மில்லாமனோலயந்
தேக்கியேயென்றன்
சிந்தைதெளிவித்
திருள்வெளியிரண்டுக்
கொன்றிடமென்ன
அருடருமானந்தத்
தழுத்தியென்செவியில்
எல்லையில்லா
ஆனந்தமளித்து
அல்லல்களைந்தே
அருள்வழிகாட்டிச்
சத்தத்தினுள்ளே
சதாசிவங்காட்டிச்
சித்தத்தினுள்ளே
சிவலிங்கங்காட்டி

அணுவிற்கணுவாய்
அப்பாலுக்கப்பாலாய்க்
கணுமுற்றிநின்ற
கரும்புள்ளேகாட்டி
வேடமுநீறும்
விளங்கநிறுத்திக்
கூடுமெய்த்தொண்டர்
குழாத்துடன்கூட்டி
அஞ்சக்கரத்தின்
அரும்பொருடன்னை
நெஞ்சக்கருத்தி
னிலையறிவித்துத்
தத்துவநிலையைத்
தந்தெனையாண்ட
வித்தகவிநாயக
விரைகழல் சரணே.

முற்றிற்று.

# விநாயக கவசம்

திருவாவடுதுறை
ஆதீனத்து
கச்சியப்ப சுவாமிகள்
அருளிச்செய்தது.

உ

கணபதி துணை.



# விநாயகர் கவசம்.

ஆதியில் இக்கவசத்தைக் காசிப முனிவர் முற்கல முனிவருக்கு அருளிச்செய்ய, அவர் மாண்டவிய முனிவருக்கு அநுக்கிரகிக்க, அவர் மரீசி முனிவருக்கு உபதேசித்தருள, அவர் பல முனிவர்களுக்குத் திருவாய் மலர்ந்தருளிச் செய்தனரென்றறிக.

நித்திய கருமங்களை முடித்துப் பரிசுத்தமாகிய ஓரிடத்தில் இருந்துகொண்டு, ஒன்றுபட்ட மனதுடனே விநாயகரைத் தியானித்து இதைச் செபிக்கவேண்டும்.

## நூல்

வளர்சிகையைப் பராபரமாய்
வயங்குவிநா யகர்காக்க
வாய்ந்த சென்னி
யளவுபடா வதிகசவுந்
தரதேகம தோற்கடர்தா
மமர்ந்து காக்க
விளரறநெற் றியையென்றும்
விளங்கியகா சிபர்காக்க
புருவந் தம்மைத்
தளர்வின்மகோ தரர்காக்க
தடவிழிகள் பாலசந்
திரனார் காக்க. 1

கவின்வளரு மதரங்கச
முகர்காக்க தாலங்கணக்
கிரீடர் காக்க
நவில்சிபுகங் கிரிசைசுதர்
காக்கநனி வாக்கைவி
நாயகர்தாங் காக்க

அவிர் நகைதுன் முகர்காக்க
வள்ளெழிற்செஞ்செவிபாச
பாணி காக்க.

தவிர்தலுறு திளங்கொடிபோல்
வளர்மணிநா சிஜையச்சிந்தி
தார்த்தர் காக்க. 2

காமருபூ முகந்தன்னைக்
குணேசர்நனி காக்ககளங்
கணேசர் காக்க

வாமமுறு மிருதோளும்
வயங்குகந்த பூர்வசர்தா
மகிழ்ந்து காக்க

ஏமமுறு மணிமுலைவிக்
கினவிநா சன்காக்க
விதயந் தன்னைத்

தோமகலுங் கணநாதர்
காக்கவகட்டினைத்துலங்கே
ரம்பர் காக்க. 3

பக்கமிரண் டையுந்தரா
தரர்காக்க பிருட்டத்தைப்
பாவ நீக்கும்

விக்கினக ரன்காக்க
விளங்கிலிங்கம் வியாளபூ
டணர்தாங் காக்க.

தக்கருய்யாங் தன்னேவக்
கிரதுண்டர் காக்கசக
னத்தையல்லல்

உக்ககண பன்காக்க
ஊருவைமங் களமூர்த்தி
யுவந்து காக்க. 4

தாழ்முழந்தாண் மகாபுத்தி
காக்கவிரு பதமேக
தந்தர் காக்க

வாழ்காங்கிப் பிரப்பிரசா
தனர்காக்க முன்கையை
வணங்கு வார்நோய்

ஆழ்தரச்செய் யாசாபூ
ரகர்காக்க விரல்பதும
வத்தர் காக்க
கேழ்கிளரு நகங்கள்விநா
யகர்காக்க கிழக்கினிற்புத்
திசர் காக்க 5

அக்கினியிற் சித்திசர்
காக்கவுமா புத்திரர்தென்
றிசை காக்க
மிக்கநிரு தியிற்கணே
சுரர்காக்க விக்கினவர்த்
தனர்மேற் கென்னுந்
திக்கதனிற் காக்கவா
யுவிற்கசகன் னன்காக்க
திகழு தீசி
தக்கநிதி பன்காக்க
வடகிழக்க லீசநந்
தனரே காக்க. 6

ஏகதந்தர் பகன்முழுதுங்
காக்கவிர விறுஞ்சந்தி
யிரண்டன் மாட்டும்
ஓகையின்விக் கினகிருது
காக்கவிராக் கதர்பூத
முருவே தாள
மோகினியே யிவையாதி
யுயிர்த்திறத்தால் வருந்
முடிவி லாத [துயரு
வேகமுறு பிணிபலவும்
விலக்குபுபா சாங்குசர்தாம்
விரைந்து காக்க 7

மதிஞானந் தவந்தான
மானமொளி புகழ்குலம்
சரீர முற்றும் [வண்
பதிவான தனந்தானி
யங்கிரக மனைவிமைந்தர்
பயினட் பாதிக்

கதியாவுங் கலந்துசர்வா
யுதர்காக்க காமர்பவுத்
திரர்முன் னை
விதியாருஞ் சுற்றமெலா
மயூரேச ரெஞ்ஞான்றும்
விரும்பிக் காக்க 8

வென்றிசீ விதங்கபிலர்
காக்ககரி யாதியெலாம்
விகடர் காக்க
என்றிவ்வா றிதுதனைமுக்
காலமுமோ திடினும்பா
விடையூ றொன்றும்
ஒன்றுறா முனிவரர்கா
ளறிமின்கள் யாரொருவ
ரோதி னாலு
மன்றவாங் கவர்தேகம்
பிணியறவச் சிரதேக
மாகி மன்னும். 9

விநாயக கவசம் முற்றிற்று.

உ

# விநாயகர் அகவல்.



## பதவுரை.

1 சீதக் களப-குளிர்ந்த கலவைச் சாந்து அணிந்த-
செம் தாமரைப் பூ-சிவந்த தாமரைப் பூப்போன்ற-
பாதச் சிலம்பு-கால்களில் உள்ள சிலம்புகள்;
பல இசை பாட-பலவிதமான ஒலிகளைச் செய்ய,
பொன் அரை ஞாணும்-பொன்னாலான அரையிற்
[கட்டுங் கயிறும்;
பூம் துகில் ஆடையும்-பொலிவான பட்டாடையும்;

வன்ன மருங்கில்-நல்ல நிறம் உள்ள இடுப்பிலே-
வளர்ந்து அழகு எறிப்ப-உயர்ந்து அழகு வீச,
பேழை வயிறும்-பெட்டி போன்ற வயிறும்,
பெரும் பாரக் கோடும்-பெரிய பாரமான கொம்பும்,
வேழ முகமும்-யானை முகம் போன்ற முகமும்,
விளங்கு சிந்தூரமும்-(அதில்)விளங்கும் பொட்டும்,
அஞ்சு கரமும்-ஐந்து கைகளும்,
அங்குச பாசமும்-(கைகளிலுள்ள) தோட்டியும் [கயிறும்,
நெஞ்சிற் குடி கொண்ட-(அடியவர்) மனதிலே [தங்கிய-
நீல மேனியும்-நீல நிறமுள்ள உடம்பும்,

நான்ற வாயும்-தொங்குகின்ற வாயும்,
நாலு இரு புயமும்-எட்டுத் தோள்களும்,
மூன்று கண்ணும்-மூன்று கண்களும்,
மும்மதச் சுவடும்-மூவகை மதம் சொரி தழும்பும்,
இரண்டு செவியும்-இரண்டு காதுகளும்,
இலங்கு பொன் முடியும்-பிரகாசிக்கின்ற பொன் [மகுடமும்,
திரண்ட முப்புரி நூல்-(இழைகள்) சேர்ந்த மூன்று [புரி நூல்
திகழ் ஒளி மார்பும்-விளங்கும் ஒளியுள்ள மார்பும்,
சொல் பதம் கடந்த-சொல்லையும் பொருளையும் [கடந்த-

துரிய மெய் ஞான-மேலான உண்மை அறிவு
[மயமான-
அற்புதம் நின்ற-அதிசயமும் (நிறைந்து) நின்ற
கற்பகக் களிறே!-கற்பகப் பிள்ளையாரே!
முப்பழம் நுகரும்-மூன்று வகைப் பழம் உண்ணும்
மூஷிக வாகன!-பெருச்சாளி வாகனரே!
இப்பொழுது என்னை-இந்த நேரம் என்னை
ஆட்கொள வேண்டி-அடிமை ஆளாகக்
[கொள்ளும்படி
தாயாய் எனக்கு-தாய்போல் ஆகி எனக்கு முன்
தான் எழுந்தருளி-தேவரீர் எழுந்தருளி வந்து
மாயாப் பிறவி-நீங்காத பிறப்புடனுள்ள

மயக்கம் அறுத்து-(பிரபஞ்ச) மயக்கத்தைக்
[கெடுத்து
திருந்திய முதல்-திருந்துமாறு முதன்மையான
ஐந்து எழுத்தும்-(ஸ்ரீ பஞ்சாக்ஷர)ஐந்து எழுத்தும்
தெளிவாய்ப் பொருந்தவே-விளக்கமாக
[அமையும்படி
வந்து என் உளத்தினிற் புகுந்து-தோற்றி என்
[மனதிற் புகுந்து
குருவடிவு ஆகி-குருவினது வடிவம் ஆகி
குவலயம் தன்னில்-இந்தப் பூமியின் இடமாக
திரு அடி வைத்து-திருவடி தலைமேல் வைத்து
[தீட்சை செய்து

திறம் இது பொருள் என-தெரியும் திறமானது [இப்பொருள் என்று
வாடா வகைதான்-யான் சோர்வடையாத விதமாக
மகிழ்ந்து எனக்கு அருளி-மகிழ்வுடன் எனக்குச் [சொல்லியருளி
கோடு ஆயுதத்தால்-கொம்பாகிய ஆயுதத்தினால்
கொடுவினை களைந்து-கொடிய செயல்களை நீக்கி
உவட்டா உபதேசம்-வெறுக்காத போதனையை
புகட்டி என் செவியில்-எனது காதில் புகச்செய்து
தெவிட்டாத ஞானம்-(நிரம்பி) வெறுக்காத ஞானம் [என்னும்
**தெளிவையும் காட்டி-தெளிந்த அறிவையும் காண்பித்து**

ஐம்புலன் தன்னை-(சுவை, ஒளி ஊறு, ஓசை,
[நாற்றம் ஆகிய) ஐந்து புலன்களையும்
அடக்கும் உபாயம்-அடக்கி ஆளும் உபாயத்தை
இன்பு உறு கருணையின்-இன்பத்தைச் செய்யும்
[அருளினால்
இனிது எனக்கு அருளி-இனியதாக எனக்குத்
[தந்து
கருவிகள் ஒடுங்கும்-(கண் காது முதலிய) கருவி
[களின் உணர்ச்சி ஒடுங்கும்
கருத்தினை அறிவித்து-எண்ணத்தை அறியச்செய்து
இருவினை தன்னை அறுத்து-நல்வினை தீவினைப்
[பயன்களைக்கெடுத்து

இருள் கடிந்து-ஆணவ இருளின் வலிமையைக்
[கெடுத்து
தலம் ஒரு நான்கும்-(சத்திநிபாத) நிலைகள் நான்கும்
தந்து எனக்கு அருளி-பொருந்தச் செய்து எனக்கு
[அருள் செய்து
மலம் ஒரு மூன்றின்-ஆணவம் கன்மம் மாயை
[என்னும் மும் மலத்தினதும்
மயக்கம் அறுத்து-மயக்கத்தை மாற்றி
ஒன்பது வாயில்-உடம்பின் ஒன்பது வாய்தல்
[களையும்
ஒரு மந்திரத்தால்-ஒப்பற்ற இரகசிய மந்திரத்தால்
ஐம்புலக் கதவை-பஞ்சப் புலன்களின் கதவுகளை

அடைப்பதும் காட்டி-மூடி அடைப்பதனையும்
[காண்பித்து
ஆறு ஆதாரத்து-மூலாதாரம் முதலிய ஆறு
[இடங்களிலும்
அம்குச நிலையும்-ஆன்மா தங்கும் அழகிய கடிவாள
[நிலையும்
பேறு நிறுத்தி-பெற்றுக்கொள்ளுமாறு நிற்கச்
[செய்து
பேச்சு உரை அறுத்து-சொல்லும் பொருளும்
[கடந்து
இடைபிங் கலையின்-இடம், வல மூக்குச்
[சுவாசங்களின்

எழுத்து அறிவித்து-எழுத்தாகிய நியதியை
[அறியச்செய்து
கடையில் சுழுமுனை-ஈற்றிலுள்ள சுழுமுனை
[நாடியின்
கபாலமும் காட்டி-கபால இயக்கமும் காணும்படி
[செய்து
மூன்று மண்டலத்தின்-சூரிய சந்திர அக்கினி
[என்னும் மூன்று இடத்திலும்
முட்டிய தூணின்-பொருந்திய தூண் போலவும்
நான்று எழு பாம்பின்-தொடர்ந்து எழும் பாம்பு
[போலவும்
நாவின் உணர்த்தி-நாக்கினால் உணரச் செய்து

குண்டலி அதனில்-குண்டலி சக்தியில்
கூடிய வசபை-பொருந்திய வசபை என்னும்
விண்டு எழு மந்திரம்-காற்று எழும் மந்திரத்தை
வெளிப்பட உரைத்து-நன்கு தெரியும்படி சொல்லி
மூலாதாரத்தின்-மூலாதாரம் என்னும் இடத்தில்
மூண்டு எழு கனலை-தொடங்கி எழும் அக்கினியை
காலால் எழுப்பும்-வாயுவினால் எழச்செய்கின்ற
கருத்து அறிவித்து-சிந்தனையை தெரியச்செய்து
அமுத நிலையும்-அமிர்தபானம் செய்து இருக்கு [மாற்றையும்
ஆதித்தன் இயக்கம்-சூரியன் இயங்கு மாற்றையும்

குமுத சகாயன் குணத்தையும்-சந்திரனின் இயக்க [இயல்பையும்
கூறி-அறியும்படி சொல்லி
இடைச் சக்கரத்தின்-இடையில் உள்ள [மண்டலத்தின்
ஈர் எட்டு நிலையும்-பதினாறு வகை நிலையும்
உடற் சக்கரத்தின்-உடம்புச் சக்கரத்தின்
உறுப்பையும் காட்டி-பகுதிகளையும் காண்பித்து
சண்முக தூலமும்-ஆறு அங்க தோற்றமும்
சதுர்முக சூட்மமும்-நான்கு வேத சுருக்கமும்
எண் முகம் ஆக-நினைந்து அறியும்படியாக
**இனிது எனக்கு அருளி-இனிது எனக்கு அருள் செய்து**

புரி அட்ட காயம்-புரங்கள் எட்டுறும் வடிவம்
புலப்பட எனக்கு-எனக்குப் புலப்பட
தெரி எட்டு நிலையும்-தெரியும் எட்டு (யோக
[நிலைமையும்
தெரிசனப் படுத்தி-காணும்படி செய்து
கருத்தினில் கபால வாயில்-விருப்போடு
[தலையோட்டின் வாயிலைக்
காட்டி இருத்தி-காண்பித்து, இருக்கச்செய்து
முத்தி-சீவன் முத்தனாகிய நிலைமையை
இனிது எனக்கு அருளி-இனியதாக எனக்குத்தந்து
என்னை அறிவித்து-என்னை (ஆன்ம இயல்பை)
[அறியச்செய்து

எனக்கு அருள் செய்து-எனக்குத் திருவருட்
[பதிவை ஆக்கி
முன்னை வினையின்-முன் செய்த வினையினது
முதலைக்களைந்து-பயனைத் (அனுபவித்து)
[தொலைக்கச்செய்து
வாக்கும் மனமும்-சொல்லும் சிந்தனையும்
இல்லா மனலயம்-வேறாகாத மனத்தின் ஒடுக்கம்
தேக்கியே என்றன்-நிறையச்செய்து எனது
சிந்தை தெளிவித்து-சித்தத்தைத் தெளியச்செய்து
இருள் வெளி இரண்டுக்கு-மயக்கமான
[இடைபிங்கலை இரண்டுக்கும்

ஒன்று இடம் என்ன-ஒன்றான சுழுமுனை
[இயக்கம் இடம் ஆக
அருள் தரும் ஆனந்தத்து-அருள் பெரும்
[மகிழ்ச்சியில்
அழுத்தி என் செவியில்-அமிழ்த்தி எனது
[செவிகளில்
எல்லை இல்லா-அளவு கடந்த
ஆனந்தம் அளித்து-ஆனந்த நடன ஒலி கேட்கச்
[செய்து
அல்லல் களைந்து-பிறவித்துன்பத்தை நீக்கி
அருள்வழி காட்டி-திருவருள் வழி நிற்றலைக்
[காண்பித்து

சத்தத்தின் உள்ளே-ஓசையிலுள்ளே
சதாசிவம் காட்டி-சதாசிவத்தின் செயலைக் காட்டி
சித்தத்தின் உள்ளே-மனத்தினிடமாக
சிவலிங்கம் காட்டி-சிவலிங்க வடிவைக் காட்டி
அணுவிற்கு அணுவாய்-மிகச்சிறிதினும்
[மிகச்சிறிதாய்
அப்பாலுக்கு அப்பாலாய்-அளவு கடந்ததற்கு
[அப்பாலுமாய்
கணுமுற்றி நின்ற-கணுக்கள் முதிர்ந்து நிற்கும்
கரும்பு உள்ளே காட்டி-கரும்பின் சுவையை
[உள்ளே காண்பித்து
வேடமும் நீறும்-சிவ வேடமும் திரு நீறும்

விளங்க நிறுத்தி-உலகில் விளங்கும்படி நிலைநாட்டி
கூடும் மெய்த் தொண்டர்-வளருகின்ற
[மெய்யன்பர்களுடைய
குழாத்துடன் கூட்டி-கூட்டத்துடன் சேரச்செய்து
அஞ்சு அக்கரத்தின்-(சிவமூல மந்திரமாகிய) ஐந்து
[எழுத்தின்
அரும் பொருள் தன்னை-அரிய பொருளான
[கடவுளை
நெஞ்சக் கருத்தின்-மனதிலிருக்கும் தியானத்தின்
நிலை அறிவித்து-நிலைமையை அறியச்செய்து
தத்துவ நிலையைத்தந்து-உண்மை நிலைமைக்
[கொடுத்து

எனை ஆண்ட-என்னை அடிமைகொண்டருளிய
வித்தக விநாயக-சமர்த்துடையவரே! விநாயகரே!
விரை கழல் சரணே-தேவரீருடைய வாசனை
[பொருந்திய திருவடிகளே எனது புகலிடமாம்.

இந்த அகவற்பாவானது ஸ்ரீ சித்தி விநாயகப் பெருமானைப் பிரார்த்தனைசெய்து துதிப்பதோர் தோத்திரம் ஆகும். அறம், பொருள், இன்பம், விடு ஆகிய நாற்பெரும் பயனையுந்தரவல்லது. சித்திவிநாயகர் திருவருள் பாலிப்பது. ஆகலின இது யாவரும் விரும்பிப் பாராயணஞ் செய்யத்தக்கதாம்.

இதில் முதல் பதினைந்து அடிகள்வரை விநாயகப் பெருமானின் திரு உருவப் பொலிவும், தியானிக்கப்

படுமாறும், எதிர்முகமாக விளித்தலும் கூறப்படுகின்றன. மேல் முப்பத்துநான்கு வரை, கடவுள் குரு முகமாக அநுக்கிரகஞ் செய்தலும், உபதேசஞ் செய்தலும், அத்தீட்சையாலும் ஒழுக்கத்தினாலும் சிவஞானம் அடைதலும் ஐம்புல அடக்கமும் உண்டாக இருவினை ஒப்பு மல பரிபாகம் சத்தி நிபாதம் உற்று ஆன்மா சிவப்பேறுறும் பரிபக்குவப்படுமாறு கூறப்படுகிறது. மேல் யோகாப்பியாசமும் ஆன்ம நிலை மூலாதாரம் முதலிய ஆறிடங்களிலும் ஆமாறும் சுவாச நிறுத்தப் பயிற்சியும் இடைபிங்கலை, சுழுமுனை என்னும் மூன்று நாடி இயக்க வேறுபாடுகளும் சுழுமுனை இயக்கம் பெறும் சிவயோகப் பயிற்சியும் சீவன் முத்தனும் நிலைமையும்

திருவருள் வழி நிற்றலும் சிவப்பேறுறுதலும் கூறுகிறது. ஆகவே அன்பர்கள் யாவரும் இதனைப் பாராயணஞ்செய்து பயன்பெறுவாராக.

---

௨

# விநாயக கவசம்.

வளர் சிகையை, (என்னுடைய) வளருந் (தலைமயிர்க்)
[குடுமியை
பராபரமாய் வயங்கும் மிக மேலானதும் மிகக்
[குறைவானதும் ஆகி விளங்கும்

விநாயகர் காக்க, விநாயகப் பெருமான் காக்குக.
வாய்ந்த சென்னி, பொருந்திய (எனது) தலையை,
அளவு படா, எண்ணிக் கூறமுடியாத
அதிக சவுந்தரதேக, மிகுந்த அழகு உள்ள உடம்பை
[யுடைய
மகோற்கடர்தாம், மகோற் கடர் என்னும்
[பெயருடையவர்
அமர்ந்து காக்க, விரும்பிக் காவல் செய்க:
விளர் அற நெற்றியை, துன்பம் நீங்கும்படி எனது
[நெற்றியை,
என்றும் விளங்கிய, எக்காலமும் கெடாது விளங்கிய
காசியபர் காக்க, காசிப முனிபுத்திரர் ஆனவர் காக்க.

புருவந் தம்மை, இரண்டு கண்ணிமைப் புருவங்களையும்
தளர்வு இல், எந்நாளும் தளர்தல் இல்லாத
மஹோதரர் காக்க, மஹோதரப்பெருமான் காக்க.
தடவிழிகள், விசாலமான இரண்டு கண்களையும்
பால சந்திரனர் காக்க, பாலசந்திரப்பெருமான் காக்க.
கவின் வளரும் அதரம், அழகு மிகுந்த உதடுகளை,
கசமுகர் காக்க, கஜாநநர் காவல்செய்க. (யானைமுகவர்)
தாலம், நாக்கினை,
கணக்கிரீடர் காக்க, கணக்கிரீடர் காவல் செய்க.
[(கணத்தலைவர்)
நவில் சிபுகம், பேசும் மோவாயை,

கிரிசை சுதர் நனி காக்க, கிரிஜா புத்திரர் நன்கு காக்க.
[(கிரிஜா-உமை)

வாக்கை, பேச்சை,
விநாயகர் தாம் காக்க, விநாயகர் காவல் செய்க.
அவிர் நகை, விளங்கும் பற்களை,
துன்முகர் காக்க, துன்முகர் காக்க. (மாறான
[முகமுடையர்)
வள் எழில் செஞ்செவி, ஒளியுள்ள அழகிய சிவந்த
[காதுகளை
பாச பாணி காக்க, பாசந்தரித்த கை உடையவர் காக்க.
தவிர்தல் உறுது, தவறுதல் இல்லாமல்
இளங் கொடிபோல், இளமையான கொடிபோல

வளர்மணி நாசியை, வளரும் அழகிய மூக்கை,
சிந்திதார்த்தர் காக்க, அடியவர் சிந்தனைப்
[பொருளாவார் காக்க.
காமரு பூ முகந்தன்னை, விரும்பும் செந்தாமரைப் பூப்
[போன்ற முகத்தை,
குணேசர் நனிகாக்க, நற்குண இறைவர் நன்கு காக்குக.
களம் கணேசர் காக்க, கழுத்தினை கண நாயகர் காக்க.
வாமம் உறும், அழகு பொருந்திய
இரு தோளும், இரண்டு புயங்களையும்,
வயங்கு கந்த பூர்வசர்தாம், விளங்கும் கந்தசுவாமி முற்
[தோன்றியவர்
மகிழ்ந்து காக்க, மகிழ்ச்சியுடன் காவல் செய்க.

ஏமம் உறும், உயர்ச்சி பொருந்தும்
அணி முலை, அழகிய இரு முலைகளையும்,
விக்கின விநாசன் காக்க, இடையூறுகளை நீக்குபவர் [காக்க
இதயம் தன்னை, இருதயத்தானத்தை,
தோம் அகலும், யாதொரு குறையும் இல்லாத
கணநாதர் காக்க, பூதகணங்களுக்கு இறைவர் காக்க
அகட்டினை, வயிற்றை,
துலங்கு ஏரம்பர் காக்க, விளங்கும் ஏரம்பர் காவல் செய்க.
பக்கம் இரண்டையும், இரண்டு பக்கங்களையும்,
தாராதரர் காக்க, பூமியைத் தாங்குபவர் காக்க.

பிருட்டத்தை, முதுகுப்பக்கத்தை,
பாவம் நீக்கும், பாவத்தைப் போக்கும்
விக்கின காரன் காக்க, விக்கினங்களைக் கெடுப்பவர் காக்க
விளங்கு லிங்கம், விளங்கும் குறியினை
வியாள பூடணர் தாம் காக்க, சர்ப்பாபரணர் காவல் செய்க
தக்க குய்யம் தன்னை, தகுதியான இரகசிய இடத்தை,
வக்கிர துண்டர் காக்க, வளைந்த மூக்குடையவர் காக்க
சகனத்தை, அரைப் பிரதேசத்தை
அல்லல் உக்க, துன்பங்கள் நீங்கும்
கணபன் காக்க, பூத கணங்களை பரிபாலிப்பவர் காக்க

ஊருவை, தொடைகளை,
மங்கள மூர்த்தி, மங்கள வடிவ முடையவர்
உவந்து காக்க, மகிழ்ந்து காவல் செய்க.
தாழ் முழந்தாள், தாழுகின்ற முழந்தாள்களை
மகா புத்திகாக்க, புத்தி நாயகர் காக்க
இரு பதம், இரண்டு கால்களையும்,
ஏக தந்தர் காக்க, ஒற்றைக் கொம்புடைய பெருமான்
காக்க.
வாழ் கரம், நல்வாழ்வு தரும் கைகளை
க்ஷிப்பிரப் பிரசாதனர் காக்க, க்ஷிப்பிரப் பிரசாதனர்
என்னும் பெருமான் காக்க
முன் கையை, முன் கைகளை

வணங்குவோர் நோய், வணங்குபவர்களது நோய்களை
ஆழ்தரச் செய், கெடும்படி செய்கின்ற
ஆசா பூரகர் காக்க, (அடியார்) ஆசையை நிறைப்பவர் காக்க
விரல், விரல்களை
பதும வத்தர் காக்க, செந்தாமரைப் பூப்போன்ற முகத்தினர் காக்க
கேழ் கிளரும் நகங்கள், நிறம் விளங்கும் நகங்களை
விநாயகர் காக்க, விநாயகப்பெருமான் காக்க
கிழக்கினில், கிழக்குத்திசை மருங்கில்
புத்தீசர் காக்க, புத்திதேவி நாயகர் காக்க

அக்கினியில் சித்தீசர் காக்க, தென்கிழக்கில் சித்திதேவி
கணவர் காக்க
உமாபுத்திரர் தென்னுசை காக்க, உமாதேவி குமாரர்
தெற்கில் காக்க
மிக்கநிருதியில் கணேசுரர்காக்க, மிகுந்ததென்மேற்கில்
பூதகணத்தலைவர் காக்க
விக்கினவர்த்தனர், (நினையார்க்கு) விக்கினங்களை
வளர்ப்பவர்
மேற்கு எனுந்திக்கதனிற்காக்க, மேற்குத்திக்கில் காக்க
வாயுவில் கசகன்னன் காக்க, வடமேற்கில் யானைக்
காதுடையவர் காக்க
திகள் உதிசி, விளங்கும் வடதிசையில்

தக்க நிதியன் காக்க, தக்க பொருளாளர் காக்க
வடகிழக்கில், வடகிழக்குத்திசையில்
ஈச நந்தனர் காக்க, ஈசுர புத்திரர் காக்க
ஏகதந்தர் பகல் முழுதும் காக்க, ஒற்றைக்கொம்பர்
பகற்காலத்தில் காக்க
இரவினும் சந்திஇரண்டன்மாட்டும், இராக்காலத்திலும்
காலை மாலைச் சந்தியாகாலங்களிலும்
ஓகையின் விக்கின கிருது காக்க, மகிழ்வோடு
இடையூறு செய்பவர் காக்க
இராக்கதர், பூதம், உறு வேதாளம், இராட்சதர்
பூதங்கள், மிக்க வேதாளங்கள்

மோகினி, பேய் இவை ஆதி, மோகினிகள், பேய்கள்
என்பவை முதலான

உயிர்த்திறத்தால் வருந்துயரும், உயிருள்ளவைகளால்
வரும் துன்பங்களும்

முடிவிலாத வேகம் உறும்பிணி பலவும்-அளவற்ற
கொடிய நோய்கள் பலவும்

விலக்கு பாசாங்கு சர்தாம், விலக்குகின்ற பாசம்
அங்குசம் தரிப்பவர்

விரைந்து காக்க, விரைவாக அருள்செய்து காக்குக

மதி-ஞானம், தவம் தானம்-எண்ணுகின்ற ஞானம்
தவம், தானம்

மானம் ஒளி புகழ் குலம்-மானம், ஒளி, புகழ், குலம்

வண் சரீரம்-வண்மையுள்ள சரீரம்
முற்றும் பதிவான-முழுதாகப் பொருந்திய
தனம் தானியம் கிருகம்-தனம், தானியம், வீடு
மனைவி மைந்தர் பயில் நட்பு-பொருந்திய நண்பு
ஆதிக் கதியாவும்-முதலான பேறுகள் யாவற்றையும்
சர்வாயுதர் கலந்து காக்க-சர்வாயுதரான கணேசர் பரந்து காக்க
காமர் பவுத்திரர் முன்னான-அழகிய பேரர் முதலான
விதியாருஞ் சுற்றம் எலாம்-முறையான சுற்றத்தார் யாவரையும்
எஞ்ஞான்றும் மயூரேசர்-எந்நாளும் மயூரேச விநாயகர்
விரும்பிக்காக்க-விருப்பமுடன் காக்க.

வென்றி சிவிதம்-வெற்றிதரும் சீவியத்தை
கபிலேசர் காக்க-கபில விநாயகர் காக்க
கரி ஆதி எலாம்-யானை முதலிய பிராணிகளை எல்லாம்
விகடர் காக்க-விகட விநாயகர் காக்க
என்றிவ்வாறு இதுதன்னை-என்று இந்தவிதமான
இந்தக்கவசத்தை
முக்காலமும் ஓதிடின்-தினமும் மூன்று காலமும்
பாராயணம் செய்தால்
முனிவர்காள்-சிறந்த முனிவர்களே!
நம்பால்-உங்களிடத்தில்
இடையூறு ஒன்றும்-ஒருவிதமான இடையூறும்

ஒன்றுறு அறிமின்கள்-பொருந்தமாட்டா என்பதை
அறியுங்கள்
யார் ஒருவர் ஓதினும்-எவர் ஒருவர் (அன்புடன்)
படிக்கினும்
ஆங்கவர் தேகம்-ஓதிய அவர்களுடைய உடம்பு
பிணி மன்ற அற-நோய் (முதலிய துன்பம்) மிக நீங்க
வச்சிர தேகமாகி-வைரமான அழியாத உடம்பாகி
மன்னும்-உலகத்தில் நிலைபெற்று வாழும்.







இப்புத்தகம் வெளியிட்டோர்:

பொ. கோவிந்தசாமிமுதலியார்

பொ. ஞானசம்பந்த முதலியார்

காரைக்கால், 5—2—1961

ஸ்டார் பிரிண்டிங் ஒர்க்ஸ், காரைக்கால்